மணி நேரங்கள் மின்சார விளக்குகள் இல்லாமல் நோயாளிகள் கஷ்டப் படுகிறார்கள், பாதிக்கப் படுகிறார்கள் என்று அமைச்சரவர்களுக்கும் பல லெட்டர்கள் வந்திருக்கின்றன. ஆகவே, தயவுசெய்து உடனடியாக, துரிதமாக இந்த எலெக்ட்ரிஷன்களை நியமிக்க ஏற்பாடு செய்யப் படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அந்த ஆஸ்பத்திரிக்கும் இன்னும் மற்ற ஆஸ்பத்திரிகளுக்கும் எலெக்ட்ரீஷன்களுக்கு ஏற்பாடு செய்கிறோம். விளக்குகள் ∴பெயில் ஆகலாம், சில சமயங்களில். ஆனால், கனம் அங்கத்தினர் சொல்வதுபோல அந்த அளவுக்கு இருக்காது, அவ்வளவு அதிகமாக இல்லை.

### *Family Planning Day*

* 1296 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the **Hon. the** Minister for Revenue be pleased to state—

(*a*) whether Family Planning Day was celebrated in 1959 throughout the State under the auspices of the Medical department;

(*b*) if so, in how many centres; and

(*c*) the public reaction in the various districts?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes.

(*b*) In 95 Family Planning Clinics.

(*c*) In every district there was great enthusiasm among the people to participate in the Family Planning Day Celebration. Many were eager to learn about Family Planning methods. This eagerness was particularly noticeable in rural parts.

SRI N. K. PALANISAMI : On this auspicious day, may I know what the people are expected to do?

THE HON. SRI M. A. MANICKAVELU : If it is an auspicious day, people are expected to exercise their minds very vigorously on this matter.

SRI K. VINAYAKAM : In spite of the vigorous propaganda carried on by the Government in this respect, are the Government aware of the fact that a very popular Tamil Journal of the City of Madras is carrying on a tirade against this propaganda and is almost trying to poison the minds of the mothers who wish to take to Family Planning? If so, may I know what steps the Government have taken against such kind of mischievous trade and propaganda?

THE HON. SRI M. A. MANICKAVELU : Government do not consider it necessary to take any steps in the matter, because, in spite of the tirade carried on against Family Planning, the movement is becoming very popular and it is gathering strength day by day.

21st August 1961]

SRI T. S. RAMASWAMI : The latest census figures show that the rate of increase of population in our State is the lowest when compared to the other States in India. May I know whether this is due to our propaganda or any other reasons?

THE HON. SRI M. A. MANICKAVELU : The effect of our propaganda could not have reflected on the latest census figures. But, surely, its effect will be felt later on. I think the lowest birth-rate in this State is due to-what shall I say-Tamilians' culture, tradition and all those things.

SRI A. V. P. ASAITHAMBI : இந்தக் குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தை மந்திரி சபையில் உள்ளவர்கள் அனுஷ்டித்து வருகிறார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர் கொஞ்சம் பிரயாசை எடுத்துக்கொண்டு, இதைப்பற்றி கணக்கு எடுத்துப் பார்த்தால் விவரம் தெரிய வரும். (சிரிப்பு.)

SRI A. VEDARATHNAM : இந்த குடும்பக்கட்டுப்பாடு திட்டத்தை கிருஸ்தவர்கள் மனதினால்கூட நினைக்கக்கூடாது என்று சொல்லுகிறார்கள். நான் தேர்தலுக்கு நின்ற சமயத்தில் குடும்பக்கட்டுப்பாடு திட்டத்தில் நீங்கள் பங்கு எடுத்துக் கொள்ளக் கூடாது என்று என்னிடம் கிருஸ்தவர்கள் வாக் குறுதி கேட்டார்கள். முஸ்லீம்கள் குரானைக் காரணம் காட்டி ஹராம் என் கிறார்கள். இப்பொழுது இந்த திட்டம் இந்து சமுதாயத்தில்தான் கடைப் பிடிக்கப்பட்டு வருகின்ற காரணத்தினாலே, இன்னும் கொஞ்ச காலத்திலே இந்து சமுதாயம் மைனாரிட்டியாகப் போய்விடுமோ என்ற பயம் தெரிவிக்கப்படுகிறது. இதை அரசாங்கம் ஆராய்ந்ததா ? அப்படியானால் அதன்பேரில் இந்தத் திட்டத்தை புனர் பரிசீலனை செய்ய அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : ஆரம்ப காலத்திலே கிருஸ்தவர்களிடமிருந்து, அதிலும் குறிப்பாக கத்தோலியர்களிடமிருந்து எதிர்ப்பு வந்தது. முஸ்லீம்களிடமிருந்தும் எதிர்ப்பு வந்தது. ஆனால் இப்பொழுது உள்ள நல்ல அனுகூலங்களைப் பார்த்து அவர்களும்கூட ஒப்புக் கொள்ளுகிறார்கள். போப் ஆண்டவர் கூட முதலிலே எதிர்த்தவர், இப் பொழுது சில முறைகளை ஒப்புக் கொண்டிருக்கிறார்.

*Misappropriation of funds (Tiruturaipundi Block)*

* 1297 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருத்துறைப்பூண்டி பிளாக்கில் விவசாய இலாகா உத்தியோகஸ் தர்களால் நிதி கையாடல் செய்யப்பட்டது எந்த வருஷத்தில் ?

(இ) இதுவரை அதன் பேரில் முடிவு செய்யாது காலகரணம் செய்வ தன் காரணமென்ன ?

(உ) எப்போது இது முடிவடையும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ( Defalcation took place during 1956–57 and 1957–58.

(இ) & (உ) Criminal prosecution has been sanctioned against all but one of the officials concerned. The question of sanctioning the prosecution of the remaining persons is under consideration.

SRI A. VEDARATHNAM : இந்தக் கையாடலைச் செய்தவர்கள் யார் என்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறதா? அப்படியானால் அவர்கள்மீது ஏதாவது நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளதா ? இவ்வளவு நீண்டகாலமாக ஒன்றும்